8th September 1960]

awaited from the Chief Engineer, P.W.D. (General). Sathanur Reservoir and Cheyyar River are two alternative sources of supply. The actual source for the scheme will be decided after the investigation is completed.

**SRI S. M. ANNAMALAI:** இதற்காக செலவாகக்கூடியது எவ்வளவு என்று சொல்ல முடியுமா? பல ஆண்டு காலமாக இந்தப் பிரச்சினை இருந்துகொண்டு இருக்கிறது. ஆண்டுக்கு ஆண்டு தண்ணீர் பற்றுக் குறை அதிகரித்துக்கொண்டு வருகிறது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். ஆகையால் என் சர்க்கார் பரிசீலனை செய்யவில்லை என்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI M. A. MANICKAVELU:** இப்பொழுது பரிசீலனை செய்ய உத்திரவிடப்பட்டிருக்கிறது. சிப் என்ஜினியரிடமிருந்து ரிபோர்ட் வந்த பிறகுதான் எவ்வளவு செலவாகும் என்று தெரியும்.

*Hospital Advisory Committee*

* 545 *Q.*—SRI K. R. VISWANATHAN: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have received a copy of the resolutions passed by the Hospital Advisory Committee, Ariyalur on 2nd March 1960 requesting (i) for the provision of an overhead tank; (ii) for the construction of a compound wall and (iii) for an increase in the present bed strength; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI K. R. VISWANATHAN: May I know whether such a copy of the resolutions was received by the District Medical Officer and recommendations were made to the Government with regard to these points?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** இந்தத் தீர்மானத்தின் நகல் அரசாங்கத்திற்கு இன்னும் வரவில்லை என்று சொன்னேன். இன்னும் படுக்கைகளை அதிகப்படுத்தவேண்டும் போன்ற யோசனைகள் பரிசிலனையில் இருக்கிறது.

SRI K. R. VISWANATHAN: May I know when the report was received by the Government and when the Government propose to take a decision in these matters?

THE HON. SRI M. A. MANICKAVELU: The suggestion of the Head of the Department was received some time back. It is being examined. After it has been examined, necessary action will be taken.

*Waste lands*

*546 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லாவிலே சாகுபடிக்கு லாயக்கானதாக உள்ள தரிசு நிலங்களிலே எத்தனை ஏகரா நிலங்கள் எத்தனை பேர்களுக்கு 1959—1960-ல் விநியோகம் செய்யப்பட்டன?

[8th September 1960

(ஆ) இந்நிலங்களை நிலமில்லாத விவசாயிகளுக்கு வழங்கி, கூட்டுப் பண்ணை ஏற்படுத்த உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) An extent of 673·40 acres of land was assigned to 187 persons during 1959–60, i.e., for the 12 months from April 1959 to March 1960.

(ஆ) Steps are being taken to start a co-operative farm in Kempanaickenpalayam group and Talavadi villages respectively. The Collector of Coimbatore has promised to obtain reports from the Block Development Officers, examine the possibility of farming a co-operative society and submit a report to the Government. It is also reported that about 380 acres of cultivable lands assigns to 100 Harijans in Nichampalayam village, Erode taluk, and about 312 acres of cultivable lands assigned to 75 Harijans in Pallapalayam village in Erode taluk, are available for farming societies. Another proposal to form a farming society in about 300 acres of land in the Welsapuram village, Avanashi taluk, Coimbatore district, has been received by the Co-operative Department from 35 Harijans of the Welsapuram Vivasaya Sangam. Further particulars on the proposals are awaited from the Registrar of Co-operative Societies.

SRI P. G. MANICKAM : 1960-ம் ஆண்டு மார்ச்சு மீ 25-ம் தேதியில் என்னுடைய 523 அன்-ஸ்டார்ட் கேள்விக்கு பதிலளிக்கப்பட்டபோது, கோவை ஜில்லாவில் 36.675 ஏக்கர் 10 ஸெண்ட் நிலம் இருப்பதாகவும் இந்த நிலங்களை, குறிப்பாக பவானியில் 5,9[illegible]5 ஏக்கர் 80 ஸெண்ட், கோபி செட்டிப்பாளையத்தில் 26,152 ஏக்கர் 87 ஸெண்ட் இருப்பதாக தெரிவிக்கப் பட்டிருக்கிறது. அங்கு இந்த நிலங்கள் 50, 100 ஏக்கர்கள் என்று ப்ளாட்களாக அமைந்திருக்கிறது. அவைகளை கூட்டுறவுப் பண்ணையில் கொண்டு வருவதற்கு அவைகளை அங்குள்ள ஏழை மக்களுக்கு பட்டா செய்துகொடுத்து கூட்டுறவு முறையைப் புகுத்துவதற்கு சர்க்கார் பரிசீலனை செய்யுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் என்னிடமிருந்து கேட்பதற்குப் பதிலாக அவரே நிறைய தகவல்கள் கொடுத்திருக்கிறார்கள். நான் சொன்ன இடங்களை, எப்படி கூட்டுறவு முறையில் வேண்டுமென்று கேட்டார்களோ அப்படி குறிப்பிட்ட இடத்தைச் சொல்லி அதேபோல் கேட்க முன்வந்தால் அப்பொழுது கவனிக்கப்படும்.

SRI P. G. MANICKAM : மேற்கண்ட நிலங்களில் இன்னும் பெரும் பாலான நிலங்களுக்கு பட்டா கொடுக்கவில்லை. அவை இன்னும் பிரித்துக் கொடுக்கப்படவில்லை, ஏழை ஜனங்களுக்கு. ஆகவே அது பிரித்துக் கொடுக்கப்பட்டு பட்டா வழங்கவாவது முதலில் சர்க்கார் நடவடிக்கைகள் எடுக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : பட்டா கொடுப்பதற்கும், இம்மாதிரி ஸொஸைட்டி ஏற்படுத்துவதற்கும் அரசாங்கம் நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டுதான் வருகிறது. குறிப்பாக எங்கேயாவது அம்மாதிரி துரிதமாக எடுக்கப்படவில்லை என்று எனக்கு எழுதித் தெரிவித்தால் அதை கவனிக்கலாம்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஆத்தூர் தாலூகாவில் இப்படி பல்லாயிரக்கணக்கான ஏக்கர் இருப்பதால், நமக்கு உணவுப் பற்றாக்குறையும் இருப்பதால் அங்கு கூட்டுறவுப் பண்ணைகள் ஏற்படுத்துவதற்கு அரசாங்கம் முன்வருமா ?

8th September 1960]

**The Hon. Sri M. A. MANICKAVELU** : ஆத்தூர் தாலூகாவில் முதலில் ரிசர்வ் ப்ளாக், சும்மா இருந்த நிலத்தை பயிர்செய்யக் கொடுத்தால் நன்றாயிருக்குமென்று கொடுத்தோம். அப்படிக் கொடுத்தும் பிரயோஜனமில்லே. ஆகவே, இப்படி பலன் அடையமுடியும் என்று யோசனை செய்து கூட்டுறவு பண்ணையாகவா அல்லது வேறு விதத்தில் செய்யலாமா என்பது யோசனையில் இருக்கிறது.

*Language test*

* 547 *Q*.—Sri M. P. SUBRAMANIAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government after the Reorganization of States had abolished the language test in languages other than Tamil for State and Subordinate Services ;

(*b*) if so, why was it not given effect to by the Medical Department with regard to nurses; and

(*c*) the reasons for the delay?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) Yes.

(*b*) It has been given effect to.

(*c*) Does not arise.

*Rurai Housing Scheme*

* 548 *Q*. Sri **A. VEDARATHNAM** : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சமீபத்தில் ஹைதராபாத்தில் நடந்த ஜாகை மந்திரிகள் மகாநாட்டில் கிராம ஜாகை திட்டம் பற்றி என்ன முடிவு செய்யப்பட்டது ?

(ஆ) இம்மாநிலத்தில் அம் முடிவு எப்போது அமுலுக்கு வரும் ?

(இ) இதற்காக ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை எவ்வளவு ?

(ஈ) ஹைதராபாத் மகாநாட்டின் முடிவிலிருந்து எவ்வளவு தொகை அதிகரிக்கப்பட்டிருக்கிறது ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : (*a*) A copy [a] of the recommendations of the Housing Ministers' Conference held at Hyderabad in 1959 relating to the Village Housing Projects Scheme, is placed on the Table of the House.

(*b*) The Government of India communicated their decisions on these recommendations in June 1960 and orders have since been issued for the implementation of the scheme in this State in accordance with the decisions of the Government of India.

(*c*) A sum of Rs. 70 lakhs has been set apart for the Second Plan period.

(*d*) There has been no increase in the Plan allocation, consequent on the decisions of the Conference.

---

(*a*) Printed as Appendix III on pages 496—497 *infra*.